உ

கணபதிதுணை.



# சுந்தரர்வேடுபறி.



இஃது

அஷ்டாவதானம்-பூவை,

கலியாணசுந்தரமுதலியாரால்

பரிசோதிக்கப்பட்டு

சென்னை-ஜூலை

நிரஞ்சனிவிலாச அச்சுயந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

1892ஹு.

கணபதி துணை.

# சுந்தரர்வேடுபறி.

## வெண்பா.

---

சூடுந்தமிழ்ப் பெருமாள் சுந்தரனூர் வேடுபறி, பாடுந்தமிழ்க் கலிவெண்பா வுக்கு-நாடுஞ், சிரத்திலஞ்சான் றன்னைத் திசைமுகத்தானுக்குக், காத்திலஞ்சான் கையிலஞ்சான் காப்பு.

---

பொன்பூத்த கொன்றைப் புரிசடை யாய் பொற்சிலம்பின், மின்பூத்தபாதி ப்பச்சைமேனியாய்-முன்பூத்த.

பைந்தா மறையாம்பதம்போற்றவெ ன்னிதயச், செந்தாமரைக் கிசைந்தசெல் வமே-நொந்துநொந்து.

தாய்முலைப்பாலற்றுத் தவித்தபன்றி க்குட்டிக்குப், போய்முலைம் பாலன்ற ளித்த புண்ணியனே-தாய்முலைக்கா

நாற்கடல் சூழ்மன்றி னலிந்தபுலிக்கு ட்டிக்கும், பாற்கடலையீந்த பரம்பொரு ளே-மேற்கருதித்

தேய்ந்த மதனுடம்பைத் தேடித்தி கைத்தாதி, தோய்ந்தமுலைக்கண்ணீர் து டைத்தோனே-சாந்தமுலைப்

பெண்மணியை விட்டுப் பிரிந்தநாறு ணிழந்த, கண்மணியைத் தந்தவருட் க ண்மணியே-வண்மணிசேர்

பொங்குகட னஞ்சையுண்டு பூமகட் குநாமகட்கு, மங்கிலியப் பிச்சையிட வ ந்தோனே-துங்கமறை

சாற்றுந் திருமுருகன் றன்னையளித்தோனென்று, போற்றுந் திருமுருகன் பூண்டியாய் தோற்றுநாள்

இந்நா வலந்தீவி லெண்ணுமறையோர் குலத்திற், றென்னுவ லூரிற் செனிப்பித்தாய்-என்னையந்த

ஐந்துகணைவேளி லழகுடையோனென்றுரைக்கச், சுந்தரனென்றோர் நாமஞ் சூட்டிவைத்தாய்-வந்தெனக்கு

வெண்ணெய்நல் லூருக்குளுயர்வேதியர்க டங்குலத்திற், பெண்ணைநல்லோர் காணமணம் பேசுவித்தாய் - தண்ணளியால்

என்னடிமையென்றே யினத்தில்வழக்குரைத்து, நின்னடிமை யாக்கவந்து நின்றுகொண்டாய்-பின்னைவிலைப்

பொன்முறியைக் காட்டிப் புதுமுறி
யை நான்கிழிக்க, முன்முறியைக்கொண்
டுவந்து மூட்டினாய்-நன்மைதர

முன்னமிட்ட பேரல்லான் மூவுலகுந்
தானறியப், பின்னேயும்வன்றொண்டனெ
ன்று பேரிட்டாய்-மன்னுலகில்

எம்பிரானுயேனை யித்தனைக்காளாளா
க்கியுயர், தம்பிரான் றோழனென்றுசாற்
றுவித்தாய் அம்புயத்துப்

பெண்ணுக்குத்தங்கையோபெண்கள்
குரு பீடமோ, பெண்ணுக்கு ளிப்படி
யோர் பெண்ணுண்டோ-பெண்பெற்ற

பெண்ணெவளோ வந்தப் பெண்பே
றிதுவோ வம்மம்மா, பெண்ணுக்குப்
பெண் விரும்பும் பெண்மையெனும் பெ
ண்ணரசை

பெண்கள் சிகாமணியைப் பெண்க
ளுக்கு நாயகத்தைப், பெண்கள்பெரு
மாளைப்பெண்ணமுதைப்-பெண்பிறந்த

தண்பாவை சூழுமிந்தத் தாரணியெ
ல்லாமதிக்கும், பெண்பாவையென்னு
மொரு பெய்வளையை - நண்புபெற

நாமக்கடலுலகி னம்பினே னுக்களி
த்துக்,காமக்கடலைக்கடப்பித்தாய்பூமிமி
சைச்

சைவத்துறையாக்கித் தண்டமிழைப்
பாடுவித்த, தெய்வத்துரையானதெய்வ
மே-இவ்வுலகில்

மாஞ்சோலைபுன்னை மாச்சோலைபூகம
டற், பூஞ்சோலை தன்னற்புதுச்சோலை-
ஆஞ்சோழ

நாட்டுக்குண்மிக்க நகரிருக்கவேடு பறிக், காட்டுக்குள்வந்த தென்னகாரண மோ-காட்டிலிது

வெண்காடோ செங்காடோவேய்க்காடோசாய்க்காடோ- வண்காடோநாலுமறைக் காடோ - கண்கொடிரு

வாலங்காடோவேட ராலலைக்கப்பட்டகரு, வேலங்காட்டுள்ளிருக்க வேண்டுமோ - ஞாலமுதல்

முத்தலத்துக்குள்ளே முருகன்பூண்டிப்பதியாய் இத்தலம்போல் வேறுதலமில்லையோ-இத்தலத்தில்

தாயிருந்ததிக்கிலே தன்குழவிநாடுதல்போல், நீயிருந்தாயென்றல்லோ நேர்பட்டேன்-போயிரந்த

காசும்பணமுங் கனகமணி யும்பணியு
ம், பேசுதமிழ்க்குப்பரிசுபெற்ற தெல்
லாம்-ஆசைமயல்

கோபத்தை நீக்கியுனக்கும்பிட்டோ
ர் முன்புசெய்த, பாவத்தைப்போலேப
றிகொடுத்தேன் - தாபந்தீர்த்

தெப்பொருளு நல்கா திருந்தாலுமு
ன்னிருந்த, கைப்பொருளுந்தோற்கக்க
ணக்குண்டோ-அப்பொருட்கா

அந்தக்கணக்கைப்போலானவகையு
ந்தொகையுஞ், சிந்தைக்கணக்காகச்செப்
பக்கேள் முந்தமுந்த

அம்பொன்முடி யில்ஞ்சானந்தநடரா
சன், செம்பொன்முடியிலஞ்சுசெய்தன
ன்காண்-நம்பதுமக்

கைச்சிரத்தானன்றளித்த காதுக்கடு
க்கணெழில்,வச்சிரத்துக்கேதுவிலைமட்
டுண்டோ-முச்சுடர்தா

னென்பதக்க மானகச்சியேகாம்பரன
ளித்த, பொன்பதக்கம்பத்தும் புதுப்ப
ணிகாண்-முன்பாவை

நஞ்சுவிரலேந்தருணைநாதனூர்தாமளி
த்த, அஞ்சுவிரன் மோதிரமோராம் ப
துகாண்-விஞ்சுபுகழ்க்

காளத்தியானளித்த கைக்கடகம்பூச்
சக்ர, வாளத்தையும்விலையாவாங்குமே-
நாளும்

விருத்தகிரியத்தனையான் வேண்டிவந்
தசெம்பொன், பருத்தகிரியததனையிற்
பாரம்-பெருத்தபுகழ்

வெண்ணெய்நல்லூர்காசி விரிஞ்சிபுரங்கேதாரம், அண்ணலொற்றியூர்கழுக்குன் றூடுதுறை-எண்ணுநல்லூர்

எட்டிசருங்கூடி யீந்தபணம்பாதிவெங்கள், பட்டீசரீந்தபணம் பாதிகாண்-இட்டபணி

நற்கலத்தான் பஞ்சநதி நாதனெனக்களித்த, பொற்கலத்தின்வண்ணமெண்ணப் போகாதே - சொற்கலத்தில்·

வெண்கலமும் பொன்கலமும் வெள்ளிக்கலங்களுமா, உண்கலத்திறைப்பதைம்ப துண்டுகாண்-நண்களிக்கும்

முத்துவடம்பத்துமொழி மொய்த்தவமணியின், கொத்துவடம் பத்துங்கொடுத்தனன்காண் - இந்நலஞ்சூழ்

சொற்பழனஞ் சோற்றுத் துறைசிற
ந்தவேதிகுடி, பொற்பழனங்கண்டியூர்
பூந்துருத்தி-நற்பழனம்

நெய்யாற்றுநெய்த்தான நித்தனென
க்களித்த, ஐயாற்றுமின்ன லாருயிரங்
காண்-மெய்யிலான்.

கொண்டசரம்வென்ற குடந்தைக்கு
ம்பேசர்தருங், கண்டசரம்போலிநிமேற்
காண்பேனோ-பண்டைமரு

தூரான்கொடுத்த தொருகனக மாலை
கொன்றைத், தாரானதுபோற் றயங்கு
மே-போரான

மாயூரநாதன் மகிழ்ந்தெனக்குத்தந்த
மணிக், கேயூரம்போலேகிடைக்குமோ.
தாயனைய

புள்ளிருக்கும்வேளூரான் பொற்ப
ணிகடந்ததுலே, புள்ளிருக்கும் வெண்
ணெயைப்போயுருக்கும் - பிள்ளையில்
லார்

காணிக்கைவைத்த கனகமணி மாலே
யொன்று, மாணிக்க மாலேயொன்றுவா
ங்கினேன்-நீணலத்தில்

ஈயோட்டிச்சேர்ந்தேனெடுப்பவர்போ
ல்வெய்யகலிப் பேயோட்டி நன்னிதய
ம் பெற்றனன் காண் - மேயபுகழக்

காழியான் பொற்பணிகள் கட்டிக்
கொடுத்ததிலோ, சாழியான் கையிலணி
ந்தேனே-வாழுந்

துரைச்சட்டைநாதர் சொரிந்தநிதிக்
குல்லாய் அரைச்சட்டை யங்கியனேகம்
தரைக்குனிப்

பத்தூர் கொடுத்தாலும் பன்னூர்கா ரோணருள்கத்தூரியின் விலைக்குக்காணு மோ-வைத்தமலர்

மின்னின் சரப்பணியன் மெய்ப்பணி ரூனருள், பொன்னின் சரப்பணியைப் போல்வருமோ-மின்னுமந்த

அன்பருக்கன்பானே னளித்தநவம ணிகள், ஒன்பதுக்கு மொன்பது நூறு ண்டுகாண்-என்புகல்வேன்.

நாட்டிவிருள்போக்குநவமணியிலொ ன்றிருந்தால், வீட்டில்விளக்கேற்றவே ணுமோ-ஈட்டுபொருள்

பொன்னுடை பொன்னரை ஞாண் பொன்னின் மடல் வெள்ளி மடல்,பொ ன்னுல வட்டமொடு பொற்படிக்கம் - பொன்னுன

கொத்துக் கடுக்கன் குலவு சவுககளி யாம், முத்துக்கடுக்கன் முதலாக-எத்த ஊேயோ

மண்டலத்துக் குள்ளோர் மதிக்கப்ப டாக்கவச, குண்டலத்தி ஞாறுறுகூறுவ தோ-கண்டுவிலே

சொன்னபாணமெல்லாஞ் சொன்ன லுமம்மம்மா, கன்னபாணங் கணக்கில் லே பன்னரிய

பட்டுமெத்தை பட்டருகு பட்டுத்த முவணேமேற், கட்டிலுக்குள்ளே பாப் புங் காற்கோட்டை இட்ட

சலாத்திஞெடு மேற்கட்டிசப்பிரமஞ் சத்தோ, டுலாத்துமணித் தூங்குமஞ்ச மொன்ரேு-மலாக்காவின்

சந்தனங்கற்பூரஞ் சவாதுபுழுகுவிலைக், கந்தபொடி குஞ்சமொடு காளாஞ்சி-சுந்தரஞ்சேர்

பத்துவிளக்குப்போற் பதித்தநவமணியின், குத்துவிளக்கு முதற்கூறிய சித்ரமணித்

தேரூருஞ் செல்வத் திருவீதியுஞ்சூழும், ஆரூரன்செய்த தனேகங்காண்-சீரானைக்

காவுடையா னெற்றிலோர் கண்ணுடையான் றந்தபணி பாவுடையார்க்கேற்ற பவபணிகாண்-வேவுசிராப்

பள்ளிக்கிருந்தோதம் பத்துக்காத்தாலும், அள்ளிக்கொடுத்தநிதி யாயிரங்காண்-வள்ளலெலங்கள்

செவ்வந்தி யீசரந்தச் சேயிழைக்காத் தந்தமணி, கைவந்திருந்தாலென் கண் குளிரும்-இவ்வந்தி

வண்ணத்தான் றென்மதுரை வள்ள லளித்தபணி எண்ணத்தா னுயிரநாவிலே யே-மண்ணுலகில்

சொற்பதக்கந்தன்னிற் றுரைச்சொக் கநாதனருள், பொற்பதக்கமன்றொருநா ட்பூண்டதுகாண்-நற்பதிக்கு

ளேதாம்பரசபையி லெங்கணெல்லை நாதனருள், பீதாம்பரத்தையென் பேசு வேன்-ஓதுபுகழ்ச்

சங்கரனார் மேற்சாய்ந்த தற்பரனார் ந ம்முலகாள், பங்கயனார்தென் கருவைப் பால்வண்ணர்-செங்கரும்பின்

பாட்டுக்குமுன்னே பரிசுகொடுத்தநிதி, எட்டிலடங்காதே யென்சொல்வேன்-பூட்டுமொரு

கோட்டு வராகந்தரித்தார் குற்றாலச்செம்பவளக், காட்டுவராகன் கணக்கில்லை-பாட்டையறிந்

தாகுவலயத்தோ டம்ர்கருவூரானளித்த, வாகுவலயத்தே மனங்கிடக்கும்-மோகமற

நஞ்சைக்களத்தில்வைத்த நாதனுடெங்கடிரு, வஞ்சைக்களத்தா ரளித்ததல்லால்- வஞ்சிநகர்ச்

சேரன்கொடுத்த திரவியத்தினாலே குபேரனன்று பின்னுமொரு பேர்பெற்றேன்-தாரணியில்

எங்கெங்கிருந்ததல மெல்லாந் தமிழ் பாடி, அங்கங்கேபெற்றவரும்பொருளி ல்-நங்கமலைப்

பண்ணுக்கு நேர்சொற் பரவையாெ ன்னுமொருபெண்ணுக்களித்தபணிபே சுங்கால்-பண்ணுசரி

கைச்சேலை காஞ்சிபுரச்சோலை சந்திர கா, விச்சேலைமிக்க விலைச்சேலை-மெச்சு விலைச்

சேலையிலே நூறுறு தேடுநவரத்தின ப்பூ, மாலையிலேநூறுறு வந்தனகாண் -காவிலிடு

தண்டைசிலம்பு சதங்கை சிறுபாட முங், கொண்டவிலை யாயிரமோகோடி யோ-ஒண்டொடியார்

காதுக்குப்பொன்னோலை காதுக்குப் பொற்றோடு, காதுக்குக்கொப்பு கனங் குழையுஞ்-சூதொக்கும்

கொங்கைக்கு முத்துவடங் கோகன தப்பூபோலுஞ், செங்கைக்குப்பொன்வ ளையுஞ் சீர்பெற்ற-தங்கத்தின்

சுட்டிபொட்டுக் காறை துலங்குமுத் து மூக்குத்தி கட்டுவடம் பீலியொடு காலாழி-மொட்டோ

டுருக்குமணியாளியுருவச்சவடி, யிரு க்குமணிமேகலைசு ளெட்டும் - உளைக் கில்

லகுத்துளைக்கப்போகா மணிப்பூண னந்தந்,தொகுத்துமணி யொன்பதையுந் தொட்டுப்-பகுத்ததிலே

கொப்புக்காமிந்தழுத்துக் கோமேத
கமுலையின், செப்புக்காமிந்தச் செழுந்த
ரளஞ்-செப்புமுலை.

கச்சுக்கக்காமாணிக்கக் கல்லெல்லாங்
கொண்டமுத்துக்,குச்சுக்காமிந்தக்குளி
ர்முத்து-நிச்சயித்துத்

தூணிமுத்துவாரிச் சொரிந்ததிலாரா
ய்ந்தெடுத்த,ஆணிமுத்துமூக்குத்திக்கா
குங்காண்-வாணுதலாள்

எம்மணைக்குணித்த மிருந்துவிளையா
ட, அம்மனைக்காமந்தமுத்தமத்தனையும்
செண்மணியில்

இந்தமணிசிலம்புக் கேற்றிருக்குமந்
தமணிக், இந்தமணிதண்டைக் கிசைந்தி
ருக்கும்-இந்தமணி

பாடகத்துக்காகுமிந்தப் பச்சைக்கற் காந்தளங்கைச், சூடகத்துக்காமிச் சுடர் வயிரம்-ஆடகப்பொன்

தோட்டுக்காமிந்தத் துலங்குமுழுநீல மொன்று, நாட்டுக்குளில்லா நவமணியு ம்-பூட்டுபணிக்

கின்னபணிக்கின்னவிடத்தின் பணிக் காமென்ன, அன்னநடைக்கேற்றப்டியா வமைத்து-பன்னுமளி

தேன்கூட்டிவைப்பதுபோற் றேடித் தேடித்தினமு, நான்கூட்டிவைத்தநவநி தியம்-ஊன்கூட்டில்

ஆவிபறிப்பதுபோலேயோ சிலேவேட ப், பாவிபறிக்கப் பறிகொடுத்தேன்-மே வுமனம்

கல்லானவேடர் கவர்ந்து கொண்டா
லென்ன வும்மை, யல்லாதுபோமோ வ
றியேனே-நல்லதுதான்

போனமுத்தம் போனலும் பொற்
கொடியாண்முக்குத்திக்கானமுத்தமொ
ன்று மளியீரோ-மானனையார்

கொங்கைச்சிமிள்போலுங் கொண்டு
சவ்வாதடைக்குந், தங்கச்சிமிளிரண்டுந்
தாரீரோ-செங்கைக்குப்

பொன்னின்சிலம்புமக்குப் போர்வில்
லாமல்லாலென், மின்னின்சிலம்புமக்கு
வில்லாமோ-இந்நிலத்தில்

முன்னமொருகாலிறந்த முப்புரம்வ
ந்தாலுமதற், கின்னமொருகார்சிரிப்பதி
னமோ-துன்னுமலர்

வெள்ளெருக்கமாலையென்றோ வெண் முத்துமாலைகொண்டீர், கள்ளிருக்குமோ சுரும்பைக் காட்டுமோ-வள்ளமுலை

முத்துமுடிக்கல்லான் முதுவாளெயி ற்றரவு, வைத்த முடிக்கழகு வாய்க்கு மோ-மொய்த்ததங்கம்

இட்டபொட்டுக் காறையிருந்தாலும் பொட்டுநுதற், கட்டுமுத்துக்சுட்டிதனை க் காட்டீரோ-சட்டமிடு

மோகரத்நம்மேறு முகப்பிற்பதியாம ல், நாகரத்நந்தன்னை நடுவமைத்து-நாக

விடதைப்போ னீலமணி மேல்வைத் திழைத்துப், படத்தைப்போலே யுரு வைப் பண்ணிக்-குடப்பணநேர்

பொற்பா பரணத்தின் போக்குந்தெ
ரியாமல், சர்பா பரணமென்றேதானெ
டுத்தீர்-கற்பித்து

விட்டான் கெடுத்ததன்றுவேடன்கெ
டுத்த தன்று, தட்டான்கெடுத்ததிந்தத்
தாழ்வுகாண்-இட்டமெய்யிற்

பாதியிலே பச்சையந்தப் பாதியிலே
நீலமுமாய்ப்-பாதியின்மாணிக்கப்பவள
முமாய்ப்-பாதிநகை

முத்துவிளையும் வைபிரமுந்நூறுபெ
ற்றிடத்தான், ஒத்துவிளையுமொருபாதி
இத்தனையும்

ஆகத்திருக்குமணி யத்தனையுங்கெ
ண்டொன், மோகத்தைப் போலுமக்கு
மோகமோ-தேகத்தில்

பொன்னுக்குப் பொன்னணியும்பூவு க்குப்பூவணியு,மின்னுக்குமின்னணியும் வேண்டுமோ-முன்னணிந்த

பாதிச்சோமன் புனேயப்பற்றுதென் ரேவெமது, மீதிச்சோமன்பறிக்கவே ண்ணினீர்-ஒதுதிசை

எட்டுக்கலேயு மெடுத்துடுத்த் நீரொம து,பட்டுக்கலேக்காசைப் பட்டீரோ-எட் டுத்

தரித்தகலேயார்க்குந் தனேமறைக்கா தென்ரே, பரித்தகலேயெல்லாம்பறித்தீ ர்-விரித்தநறும்

பூந்தளிர்க்கொப்பான பசும்பொன் னுடம்புக்கேற்றிருக்கு,மாந்தளிர்ப்பட் டொன்றுதா மாட்டீரோ-ஏந்திழையாள்

நற்சரிகைச்சேலையிலேநாகநிழல்காட்டுமொரு, பொற்சரிகைச் சேலைதாப் போகாதோ-சொற்சுவைதான்

பாற்குழம்புபோல்வாள் பலபணியுந் தோற்றவதா,ஞற்குழம்பு நெஞ்சைநிலைகாட்டீரோ-மார்க்கமென்ன

பொன்மாற்றுனைத்தளித்தீர் பொன்னுதவாவிட்டாலுஞ் சொன்மாற்றுனைக்கிலென்னதோஷமோ-என்மொழிக்கா

இத்தனையுநீர்சற் றிரங்கிஞலின்றுவ்ரும்அத்தனையுங் காண்ப தருமையோ-கர்த்தரோ

நாலறுபத்துக்கு ணடத்தும்வி ளையாட்டிலிது, மேலறுபத்தஞ்சாம்விளையாட்டோ-மாலறியா

மெய்யபோயிந்த விநோத மினிப்போ தமெங்க, ளையரோ கண்பார்த்தருளுமெ ன்ன-ஐயன்

மகிழ்ந்தானழன்மெழுகு வைத்தது போலுள்ள, நெகிழ்ந்தான்கருணைநிறைந் தான்-திகழ்ந்தபொருள்

வேட்டுவர்கைக் கொண்டது போல் வேட்டுவர்பான் மீட்பதுபோல்,கோட் டிகொண்ட தல்லாற்குறைவில்லா-நாட் டமுற்றுத்

தூதுநடந்திரொமது துன்பமெல்லா நீ க்குதற்கிப் போதுநடந்துவாப் போகா தோ-ஒதுபொன்னி

யாற்றைவிலக்கி யழைத்தீர் பெருமூ ச்சுக், காற்றைவிலக்கிவழி காட்டீரோ நேற்றொருகால்

செங்கற்பாளத்தைத் திருப்புகலூரு
க்குளுயர், தங்கப்பாளத்துருவாய்த்தந்
தளித்தீர், இங்குமொரு

மண்ணைப்பிடித்து மணியும்பலபணி
யும், பண்ணப் படா துண்டோபாரமோ
-விண்ணவர்சூழ்

தீட்டுபுகழ்க் குண்டையூர்ச் செந்நெ
ல்லானம்பரவை,வீட்டிலொருகாசுமினி
வேறிலைகாண்-கேட்டபடி

வள்ளமுலைத்தாய்க்குவருங்குழந்தை
கண்டளவில், துள்ளிப்முலைப்பாறுளிப்
பதுபோல்-வள்ளல்

அறுத்துண்ட பிள்ளை யழைத்தளவி
லோடிச், சிறுத்தொண்டர்முன்புவந்தசீ
ர்போல்-மறுவிட்டுப்

பின்காட்டுமூடலிலே பித்தனேந்தகா முகர்க்கு, முன்காட்டும் பெண்கண்மு லைத்துணைபோல் வன்காட்டில்

கண்ணீர்சொரிந்தபுனல் காணுதவே ளையிலே, விண்ணீர்சொரிந்த விதத்தை ப்போல்-எண்ணிமறை

வல்லான்பறித்த மணிபணிபொன்னு டைசெம்பொ,னெல்லாங்கொடுத்தாரெ மக்கு

சுந்தரனூர்வாழியவர்சொற்றமிழுஞ்சூ ரியனார், சந்திரனருள்ள மட்டுந்தான்வா ழி-இந்திரனூர், போற்றினேனென்றெம்மு ருகன் பூண்டியானன்பர்மனந் தேற்றி னேன் வாழிதினம்.

சுந்தரர் வேடுபறி.

முற்றுப்பெற்றது.

